உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்





# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்
திங்கள் தமிழ்த் தாள்

மலர் : முப்பத்துநான்கு

1961




பத்திராசிரியர் :

புலவர் – முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் :

மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை 4

# உள்ளுறை

| பொருள் | கட்டுரையாளர் | பக்க எண் |
|---|---|---|

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 1

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | சார்வரி தை 1961 ஜனவரி | இதழ் 1

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணா

# 1961-ஆம் ஆண்டின் சமாஜப் பணியாளர்கள்

இலங்கை-திருக்கேதீச்சரத்தில் 1–1–1961-ல் நடந்த சமாஜ உறுப்பினர் பொதுக்கூட்டத்தில் 1961-ஆம் ஆண்டிற்குக் கீழ்க் காணும் சமாஜப் பணியாளர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். (ஒவ்வொருவர் பெயரின் முன் 'திருவாளர்' என்றும், பின் 'அவர்கள்' என்றும் சேர்த்து வாசித்துக் கொள்க.)

தலைவர் : அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ.; துணைத் தலைவர்கள் : ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., கல். முருகேச முதலியார், பி.ஏ.; பொதுச்செயலர் : ஜி. கலியாணம் பிள்ளை, M. A., D.Econ.; துணைச் செயலர் : வித்துவான் அம்பை சங்கரனார்; பொருட் காப்பாளர் : மா. ப. தியாகராஜ முதலியார், பி.ஏ.; பத்திராதிபர் : புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.; உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி முதலியார்; மாதக் கணக்குத் தணிக்கையாளர் : வி. ஆறுமுக முதலியார்; ஆண்டுக் கணக்குத் தணிக்கையாளர் : பி. எஸ். கோபாலகிருஷ்ணன், பி.ஏ., பி.எல்., ஆர்.ஏ.; செயற்குழுவினர் : சி. என். சிங்காரவேலு முதலியார், எம்.ஏ., என். டி. கிருஷ்ணசாமி, எம்.ஏ., பி.டி., ச. நடேச முதலியார், ஜி. வடிவேலாயுதம், எம்.ஏ., பி. ஆலாலசுந்தரம் செட்டியார், எம்.ஏ., சி. வி. கிருஷ்ணமூர்த்தி. குழந்தைவேல் நாய்க்கர், ச. சிவகுமாரன், எம்.ஏ., கீ. ராமலிங்கனார், எம்.ஏ., வித்துவான் - சிவ. மீனாட்சிசுந்தரசிவை, ஆர். மாசிலாமணி முதலியார், இலக்குமி அம்மாள்.

பணியாளர் குழு :—சர். கந்தையா வைத்தியநாதன், க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., வித்துவான் - முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், டி. கே. நாராயணசாமி நாயுடு, பி. ஆர். சுவாமிநாதன், எம்.ஏ., எல்.டி., வா. தி. மாசிலாமணி முதலியார், மஞ்சக்கொல்லை சம்பந்தமூர்த்தி முதலியார், எஸ். நடராஜ நாடார், பி.ஏ., பி.எல்., பிஎல். டி. எல். தேனப்ப செட்டியார்.

பத்திராதிபர் ஆலோசனைக் குழு :—எஸ். அம்பிகைபாகன், பி.ஏ., வட்டுக்கோட்டை நாகலிங்கம், அருள் தியாகராஜா, குலசபாநாதன், டாக்டர் - எம். இராஜமாணிக்கனார், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி., என். டி. கிருஷ்ணசாமி, எம்.ஏ., பி.டி., சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார், பி.ஏ. பி.எல்., மு. நாராயணசாமி முதலியார், கீ. இராமலிங்கனார், எம்.ஏ., அ. கு. காமாட்சியம்மையார், எம்.ஏ., ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, எம்.ஏ., பிஎச்.டி., வித்துவான் முத்து - சு. மாணிக்கவாசக முதலியார்; வித்துவான் க. வெள்ளை வாரணனார்.

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 34 | சார்வரி தை 1961 ஜனவரி | இதழ் 1

## வரவேற்புரை*

(சேர். கந்தையா வைத்தியநாதன்)

" பாடல் வீணையர் பலபல சரிதைய ரெருதுகைத் தருநட்டம்
ஆடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்தர்
ஈட மாவது விருங்கடற் கரையினி லெழிறிகழ் மாதோட்டங்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே "

—சம்பந்தர்

சைவப் பெருமக்களே! தாய்மார்களே! அன்பர்களே! உங்கள் அனைவருக்கும் அடியேனின் வணக்கம்.

பழைமையும், பெருமையும் வாய்ந்த திருக்கேதீச்சரத்து வரலாற்றிலே இவ்விழா நிகழ்ச்சி, பொன் எழுத்துக்களாற் பொறிக்கப்பட வேண்டிய தொன்று. மூன்று நாட்கள் இங்கே தங்கி அளவளாவி மகிழவும், அரிய சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புறவும் பெரிய வாய்ப்பினைக் கேதீச்சரத்தான் நமக்கெல்லாம் அளித்து அருளியுள்ளான். இவ்விழாவிலே கலந்துகொள்ள இன்னருள் புரிந்த கேதீச்சரத்தானை வாழ்த்தி வணங்குவதோடு, இப் பெரும் பழம்பதியிற் சில நாட்கள் தங்குவதற்குக் கிடைத்த வாய்ப்பினையும்

---

*ஸ்ரீ திருக்கேதீச்சரத்தில் (30-12-1960) நடைபெற்ற சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜ 55-ம் ஆண்டு விழா, சைவர் மாநாட்டில் சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் நிகழ்த்தியது.

கினைந்த சைவப் பெருமக்களாகிய நாம் எல்லோரும் பெரு மகிழ்ச்சி யடையவேண்டியவர்களாகவும் இருக்கின்றோம். இவ்வரிய வாய்ப்பினை வழங்கிய சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தாருக்கு, ஈழத்துத் தமிழ்ப் பெருமக்கள் சார் பில் எனது மனமார்ந்த நன்றியறிதலை முதற்கண் கூற விழைகின்றேன்.

'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த குடி' என்று தமிழினத்தின் தொன்மை போற்றிப் பேசப்படுகின்றது. தமிழ் இனத்தைப்போலவே தமிழ் மொழியும் மிகவும் பழமையானது; பண்பட்டது. அதேபோலத் தமிழர்கள் கண்ட கடவுட் கொள்கையும் பழைமையும், பெருமையும் வாய்ந்தது; உண்மையும் உயர் வும் உடையது. அவர்கள் அன்று கண்ட சிவநெறிக் கொள்கையே இன்று 'சைவம்' என்ற பெயரில் வழங்கு கின்றது. சைவ சமயத்திலே எல்லாச் சமய உண்மை களும் அடங்கியுள்ளன. எனவே சைவ சமயம் ஒரு தனிச் சமயம் அன்று என்பதும், அது சமயங் கடந்த சமரசம் — சன்மார்க்கம் — என்பதும் ஆய்வோர்க்கு நன்கு புலனாகும். இவ்வாறு தொன்மையும், சிறப்பும் வாய்ந்த சைவ சம யத்தை இந்தியாவிலும் இலங்கையிலும் பேணி வளர்க்கவும், தென்கிழக்கு ஆசியா, ஆஃபிரிக்கா போன்ற நாடுகளில் ஏனைய சமயத்தாரிடையே சைவத்தின் மாண்பை மிளிர வைக்கவும், இந்நூற்றாண்டின் திருப்பத்தில் சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜம் நிறுவப்பட்டது. மேலும், உலக தத்துவ ஞானிகள் யாவரும் நந் தமிழர்கள் கண்ட சைவசமயத்தின் மெய்ப்பொருள் உண்மைகளை உணர்வ தற்கும் அது அரிய வாய்ப்பினை அளிக்கின்றது. இன்னும், சமயத்தை வளர்ப்பதோடு நில்லாமல் தமிழ்மொழி வளர வும் உழைத்து வந்துள்ளது. இவ்வாறு இச் சமாஜம் கடந்த அரை நூற்றாண்டு காலமாகச் செய்துவந்துள்ள அரும் பணிகளை விரித்துரைக்கின் நீண்டுகொண்டே செல்லும்!

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தோடு ஈழத்துச் சைவப் பெருமக்கள் நெருங்கிய தொடர்பும், உறவும் உள்ளவர்களாய் இருந்துவந்துள்ளதை நாம் எல் லோரும் நன்கு அறிவோம். சமாஜம் நிறுவப்பெற்றபின் 1905-ம் ஆண்டு நடந்த முதல் ஆண்டு விழாவிற்குத் தலைமை

தாங்க ஈழத்திலிருந்து சேர் பொன். இராமநாதன் அவர்கள் அழைக்கப்பட்டார்கள். பின், 1955-ஆம் ஆண்டு சிதம்பரத்தில் நிகழ்ந்த பொன் விழாவிற்கு உயர் திரு. சு. நடேச பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினர்கள். இன்னும் சமாஜத்தின் உறுப்பினரான பல சைவப் பெரியார்களும், அறிஞர்களும் விழாக்களில் தலைமை தாங்கவும், சொற்பொழிவு நிகழ்த்தவும் இங்கிருந்து அடிக்கடி அழைக்கப்பட்டுள்ளனர். அல்லாமலும் இந்தியாவிற்கு வெளியே முதன் முதல் 1948-ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்திலும், 1950-ஆம் ஆண்டு கொழும்பிலும் இச் சமாஜத்தாரின் ஆண்டு விழாக்கள் நடைபெற்றன. பத்து ஆண்டுகள் கழித்து மீண்டும் சமாஜத்தின் 55-வது ஆண்டுவிழா இலங்கையில், அதுவும் திருக்கேதீச்சரத்தில் நிகழ்வது பொருத்த முடையதும், வரவேற்கத் தக்கதுமாகும். இத் தருணத்தில் இவ்விழாவிற் கலந்துகொள்ளத் தாய்நாட்டிலே இருந்து இங்குவந்துள்ள சைவப் பெருமக்கள் ஒவ்வொருவருக்கும் எமது நன்றியையும் நல்வாழ்த்துக்களையும் ஈழத்துத் தமிழ்ப் பெருமக்கள் சார்பிற் கூறிக்கொள்ள விரும்புகின்றேன்.

பண்டுதொட்டுத் தமிழ் நாட்டிற்கும் ஈழத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்துவருவதை நாம் எல்லோரும் நன்கு அறிவோம். சைவத்திற்கும் தமிழுக்குந் தொண்டாற்ற அறிஞர்களை இன்றுவரை இரு நாடுகளும் 'கொண்டும் கொடுத்தும்' வந்துள்ளதை வரலாறு கூறும். மேலும், தேவாரம் பாடிய நாயன்மார்களுள் இருவர் திருக்கேதீச்சரத்தின் பெருமையைப் பாடிப் பராவியுள்ளனர். அவர்களுள் ஒருவர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்; மற்றவர் ஒன்பதாம் நூற்றாண்டிலே சைவம் வளர்த்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆவர். இன்னும் ஸ்ரீஇராமர், இராவணனை வென்று இலங்கையிலிருந்து அயோத்திக்குச் செல்லும்போது வழியில் திருக்கேதீச்சரத்துப் பெருமானை வழிபட்டுச் சென்றார் என்று தக்ஷிண கயிலாய புராணம் கூறுகின்றது. மேலும், பஞ்சபாண்டவர்களுள் ஒருவனன அருச்சுனன் தீர்த்தயாத்திரையின் பொருட்டு இலங்காபுரிக்கு வந்தான் என்றும், அவ்வாறு வந்த அவன் திருக்கேதீச்சரத்தானை வழிபட்டுச் சென்றான் என்றும் சொல்லப்படுகின்றது. விசயன் இலங்

கைக்கு வந்தபோது அவனேடு கூடவந்த அந்தணன் ஒருவன் சிவாலயம் ஒன்றிற் பூசை வழிபாடுசெய்தான் என்று மகாவம்சம் எடுத்துரைப்பதும் திருக்கேதீச்சரத்துச் சிவாலயம் என்பதை யாவரும் ஏற்றுக்கொள்வர். ஆரும் நூற்ருண்டிற் பாண்டிய மன்னர்கள் திருக்கேதீச்சரத்தில் ஆலயத்திருப்பணிகள் பல புரிந்தனர். இன்னும் சோழரின் ஆட்சிக்காலத்தில் திருக்கேதீச்சரத்தின் சிறப்பு உச்ச நிலையை அடைந்தது.

திருக்கேதீச்சரத்தின் பெருமையை நாயன்மார்கள் பாடிப் போந்தனர். திருநாவுக்கரசர் " பூதியணி பொன் னிறத்தர் பூணுநூலர் பொங்கரவர் சங்கரர்வெண் குழை யோர் காதர், கேதீச்சரம் மேவினர் " என்று திருத்தாண்ட கத்திற் குறிப்பிட்டுள்ளார். மாணிக்கவாசகப் பெருமான் 'குயிற்பத்திலும்' 'திருவார்த்தையிலும்' இலங்கையில் வண்டோதரிக்கு இறைவன் அருள்செய்த தலம் என்று குறிப்பிட்டுள்ளது திருக்கேதீச்சரமே என்று எல்லோ ராலும் கருதப்படுகின்றது. கேது வழிபட்டமையால் 'கேதீச்சரம்' என்ற பெயரைப் பெற்ற இத் தலத்தை வழி படுவோர் வினைகளும் நோய்களுந் தீரப்பெற்று இன் புறுவர்.

" கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக்
கெடுமிடர் வினைதானே " என்றும்,

" அண்ணல் நண்ணுகே தீச்சரம் அடைவார்க்கு
அருவினை யடையாவே " என்றும்,

" முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேல்
மொய்த்தெழும் வினைபோமே " என்றும்

பலவகையாகத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திரு வாய் மலர்ந்துள்ளார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கேதீச்சரத்தான்,

" அங்கத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருள்வான் "
என்றும்,

" வெய்ய வினையாய அடியார்மேல் ஒழித்தருள்வான் "
என்றும்,

"ஊனத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருள்வான்"

என்றும், "குறையாத் தமிழ்" சாற்றியுள்ளார். எனவே, பயமும் பீதியும்நிறைந்த இக்காலத்தில் வினையையும்நோயையும்தீர்க்குந் திருக்கேதீச்சரத்தான் கோயில் கொண்டுள்ள இப் பழம் பதியில் இவ்விழா நடைபெறுவது மிகமிகப் பொருத்தமுடையதன்றோ!

பல ஆண்டுகளாகச் சீரும் சிறப்பும் உடையதாய்த் திகழ்ந்த திருக்கேதீச்சரம் பதினாறும், பதினேழாம் நூற்றாண்டுகளிற் காலக் கழிவாலும், கவனக் குறைவாலும் பழுதடைந்து சிறப்புக் குன்றுவதாயிற்று. இலங்கைக்கு வந்த போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் இன்னும் அதனைச் சீரழித்துக் கோயில் இருந்தவிடமுந் தெரியாமற் பாழ்படுத்தி விட்டனர். இவ்வாறு சீரழிந்து சிறப்புக் குன்றிய ஆலயத்தைக் கண்டு நாவலர் பெருமான் கலங்கினார். சீர்திருத்திச் சிறப்புச்செய்ய அவர் உள்ளம் விழைந்தது. எனவே, அப்பெரியாரால் முதன் முதலில் தொடங்கப் பெற்று நடந்துவந்த திருப்பணி வேலைகளை 1948-ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட திருக்கேதீச்சர ஆலயத் திருப்பணிச் சபையார் மேற்கொண்டு செவ்வனே பணியாற்றி வருகின்றனர். அச்சபையார் ஆலயப் புனருத்தாரண வேலைகளோடு, ஆலயத்தைச் சார்ந்த இடங்களையும் சீர்திருத்தி ஆக்கப் பணிகள் பல செய்துவருவதைச் சைவப் பெருமக்கள் நன்கு அறிவர். பிள்ளைகள் கல்வி கற்பதற்குப் பாடசாலை ஒன்றையும், அடியார்கள் தங்குவதற்கு மடங்களையும் சபையாரின் உழைப்பாற் பெற்றுள்ளோம். இன்னும் குருகுலம் ஒன்றை நடாத்த எடுத்துக்கொண்ட முயற்சி பயனளித்துள்ளதையும் மகிழ்ச்சியுடன் தெரிவிக்க விரும்புகின்றேன். அனாதைக் குழந்தைகள் விடுதியொன்றையும், மங்கையர் இன்னல சங்கம் ஒன்றையும் நிறுவ ஆவன செய்துள்ளதையும் இங்குக் குறிப்பிடுகின்றேன். இவ்வாறு சீர்படுத்தப்பெற்ற இப் பழம் பதியில் நாம் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 55-ஆவது ஆண்டு விழாவை இன்று கொண்டாடுகின்றோம். அதனால் கேதீச்சரத்தானை வழிபட்டு இன்னருள்பெற முடிவதோடு, இவ் விழா நிகழ்ச்சிகளிற் கலந்து அறிவுரைகளைக் கேட்டுப் பெரும் பயனடையவும் அரிய வாய்ப்பு நமக்கெல்லாம் கிடைத்

துள்ளது. இவ்விழாவிற் பங்கு கொண்டு சிறப்பிக்க வந்துள்ள உங்கள் எல்லோரையும் பொதுவாக இவ்வூர்ச் சைவப் பெருமக்கள் சார்பிலும், சிறப்பாகத் திருக்கேதீச் சரத்துத் திருப்பணிச் சபையார் சார்பிலும் உள்ளம் உவந்து வருக, வருக என்று கூறி வரவேற்கின்றேன்!

முக்கியமாக இம் மாநாட்டிற் கலந்துகொள்ள இங்கு வந்துள்ள சிலரைப்பற்றி ஒரு சில கூறவேண்டியது எனது கடமையாகும். இம் மாநாட்டுக் கொடியை ஏற்றிவைத்த திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., அவர்களைச் சைவ உலகம் நன்கு அறியும். சைவசமயப் பண்பும் ஆழ்ந்த அறிவும் நிறைந்த அவர்கள் சிறந்த வள்ளலாகவும் விளங்குகின்றார்கள்.

அடுத்தபடியாக, இவ்விழாவிற்குத் தலைமைதாங்கும் சைவப் பெரியார் உயர்திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., அவர்களைப்பற்றி நான் அதிகம் கூறவேண்டிய அவசியமில்லை. சைவப் பெரியார் என்றும், சைவப் பாதிரியார் என்றும், வார வழிபாட்டுத் தந்தை என்றும் போற்றிப் புகழப்படும் பிள்ளை அவர்களின் தலைமையில் இவ்விழாவை எடுப்பது மிகவும் பொருத்தமான தன்றோ!

மேலும் இவ்விழாவிற்குத் திறப்புரை நிகழ்த்திய திரு. சு. நடேசபிள்ளை அவர்கள் சைவசமயப் பண்பும், அறிவும், ஆற்றலும் நிறைந்தவர்கள். சேர் பொன். இராமநாதன் அவர்களின் வாழ்வைப் பின்பற்றி ஒழுகும் அவர்கள் 1955-ஆம் ஆண்டு சிதம்பரத்தில் நடந்த பொன் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். பொன் விழாவிற்குத் தலைமைதாங்கிய அவர்களே இன்று திறப்புரை நிகழ்த்துவதால் இவ்விழா மேலும் சிறப்பைப் பெற்றுள்ளது. இன்று உயர்திரு. சு. நடேச பிள்ளை அவர்கள் தாம் வாழ்க்கையில் ஆற்றிய சேவைகளுக்கெல்லாம் சிகரமாக யாழ்ப்பாணத்தில் ஓர் இந்துப் பல்கலைக் கழகத்தை அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். அவரது இந்த முயற்சியை நாம் போற்றி வரவேற்கின்றோம். மேலும் அவரின் பணி விரைவில் ஈடேற எல்லாம் வல்ல கேதீச்சரத்தான் இன்னருளையும் இப்புனித தினத்திலே வேண்டுகின்றோம்.

இன்னும் சைவ மங்கையர் மாநாட்டிற்குத் தலைமை தாங்க வந்துள்ள திருமதி க. ர. ஆதிலட்சுமி அம்மையார் அவர்களையும், சைவ இளைஞர்மாநாட்டிற்குத் தலைமைதாங்க வந்துள்ள வித்துவான் திரு. அம்பை சங்கரனார் அவர்களையும், மற்றும், வரவேற்புரை, திறப்புரை, சொற்பொழிவுகள் நிகழ்த்த இங்கு வந்துள்ள அறிஞர்கள் எல்லோரையும் பணிவோடும், அன்போடும் மகிழ்ச்சிபொங்க வருக! வருக! தங்கள் வரவு நல்வரவாகுக என்று உளமார வாயார வாழ்த்தி வரவேற்கின்றோம். இந்த மூன்று நாட்களிலும் மனித குலத்தையும் நம்மையும் பீடித்திருக்கும் இன்னல்களைத் தீர்ப்பதற்கு நமது சமயம் காட்டும் வழிகளை ஆராய்வீர்களென்று எதிர்பார்க்கின்றோம்.

சைவப் பெருமக்களே ! தாய்மார்களே !!

இந்த மாநாட்டைத் திருக்கேதீச்சரத்தில் நடாத்துவதற்கு நாம் மிகவும் ஆர்வத்தோடு ஒப்புக்கொண்டோம். மிகக் குறுகிய கால அளவிற் பலருடைய உதவியுடன் எல்லா ஏற்பாடுகளையுஞ் செய்துள்ளோம். உங்கள் எல்லோருக்கும் எந்த அளவில் வசதிகள் செய்துகொடுக்க முடியுமோ, அந்த அளவிற்கு ஏற்ற வசதிகளைப் பெற்றுக் கொடுக்க முயன்றுள்ளோம். ஆனல் பல வசதிக்குறைவுகள் இருப்பதை நன்கு உணர்கின்றோம். குறைகள் இருப்பின் அவைகளைப் பொருட்படுத்தாது மன்னித்து நமக்கு ஊக்கமும் உதவியும் அளிக்க வேண்டுகின்றோம்.

" குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல் "

என்ற தமிழ்ப் பண்பை உங்கள் எல்லோரிடமும் எதிர் பார்த்துத் தாய்நாட்டு அன்பர்களுக்கும் ஏனைய நண்பர்களுக்கும் எமது உளங்கனிந்த நன்றியைத் திரும்பவும்கூறி வருக, வருக என்று வாழ்த்தி வரவேற்கின்றேன்.

" மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம் "

---

# திறப்புரை*

(திரு சு. நடேச பிள்ளை, பி.ஏ., பி.எல்.)

பெரியோர்களே! அன்பர்களே!

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் மாநாடு இலங்கையில் மூன்றும்முறையாக நடைபெறுவது இலங்கையிலுள்ள சைவ மக்களுக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருவதாகும். இலங்கையில் வாழும் தமிழ்மக்களிற் பெரும்பான்மையோர் சைவசமயத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் "வடவேங்கடம் தென்குமரி யாயிடைத் தமிழ்கூறும்" நல்லுலகத்தினின்று கடலாற் பிரிக்கப்பட்டிருப்பினும், அங்குள்ள தமிழ் மக்களோடு அத்தியந்தத் தொடர்புடையவர்கள்; இத்தொடர்பு என்றும் நிலைத்திருக்கவேண்டுமென்ற பேரவா உடையவர்கள்; தமிழ்நாட்டிலுள்ள சிதம்பரம் முதலிய சைவத் தலங்களைத் தங்களுடைய உயிர் நிலையாகக் கொண்டவர்கள். தமிழ்நாட்டுச் சைவமக்கள் இலங்கையிலுள்ள திருக்கேதீச்சரத்தையும், திருக்கோணமலையினையும், முருகக் கடவுளின் தலமாகிய கதிர்காமத்தையும் பெரிதும் போற்றுபவர்கள். தேவாரத்திற் சிறப்பிக்கப்பட்டதும், மிகப் பழையகாலந்தொட்டுப் பிரசித்தம் பெற்றதுமான திருக்கேதீச்சரத்தில் இன்று சைவசித்தாந்த மகா சமாஜத்தின் மாநாடு நடைபெறுவது, சேதுக்கடலின் இருபாலுமுள்ள சைவமக்களை அவர்களது வாழ்க்கையில் முக்கிய குறிக்கோளாகிய சைவத்தொண்டில் இணைக்கும் ஓர் அரும் பெரும் வைபவமாகும்.

இம் மகாநாட்டை நான் ஆரம்பித்துவைக்க வேண்டுமென்று வரவேற்புச் சபையினர் கட்டளையிட்டுள்ளார்கள். எனது ஆரம்பவுரை இம்மகாநாட்டின் திறப்புரை என்று நிகழ்ச்சி நிரலிற் குறிக்கப்பட்டிருக்கிறது. திருக்கேதீச்சரத்தில் திருக்கோயில் வாயில்களெல்லாம் திறந்தபடியிருக்

---

*திருக்கேதீச்சரத்தில் 30—12—60ல் நடைபெற்ற சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜ 55-ஆம் ஆண்டு விழா, சைவர் மாநாட்டில் திரு. சு. நடேசபிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள் நிகழ்த்தியது.

கின்றன. சிவசந்நிதானத்திற் சைவர் மகாநாடு நடைபெற இருக்கின்றது. இங்குக் கோயில்கொண்டு வீற்றிருக்கும் கேதீச்சர நாதனைக் "கண்காள் காண்மின்களோ" என்று சொல்லி, இங்கு வந்துள்ள அடியார்களுடன் கூடி வணங்குவதைத் தவிர்த்து, திறப்புரை யாது யான் சொல்லக் கடவேன் ?

இத்தலத்தில் இன்று நாம் திருக்கோயிற் சிறப்புக்களைக் காணக்கூடிய பேறு பெற்றவர்களாயிருக்கிறோம். நானூறு ஆண்டுகளுக்குமுன் இங்கிருந்த ஆலயம் புறச் சமயத்தின ரின் கொடுமையினாலே தகர்க்கப்பட்டு மறைந்துபோயிற்று. ஈழநாட்டுச் சைவப்பெரியாராக விளங்கிய ஆறுமுகநாவலர் காலத்தில் இவ்வாலயத்தின் புனருத்தாரணம் ஆரம்பிக்கப் பட்டது. இன்றும் இச் சிவகைங்கரியம் சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் தலைமையில் தொண்டாற்றும் திருப்பணிச் சபையாரால் தொடர்ந்து நடத்தப்பட்டு வருஞ் சிறப்பை நாம் கண்கூடாகப் பார்த்து, 'இங்கு இறைவன் திருவருள் இருந்தவாறு என்னே' என்று இறும்பூது கொள்கின்றோம். பண்டைநாளில் திருமறைக்காட்டுத் திருக்கோயிலின் கதவு அடைபட்டுக் கிடந்ததை அப்பர் சுவாமிகள் திறக்கப் பாடி அற்புதம் நிகழ்த்தினார்கள். இறைவனோடு ஒன்றி எண்குணங்களும் பெற்று அற்புதம் நிகழ்த்திய அப்பர் சுவாமிகள் போன்ற மாசித்தி பெற்றோர் இல்லாத காலத்திலும் திருவருள் தோன்றாத் துணையாக நின்று திருக்கேதீச்சரத்தில் ஆண்டவன் கோலத்தைக் காணும்படி எம்மனோர்க்குக் காட்சியளிக்கின்றது. அத் திருவருள் துணையை மேற்கொண்டு இங்குத் திருப்பணி செய்யும் அடியார்களுக்கு எமது வணக்கம் உரியதாகும்.

இறைவன் கோலத்தைப் புறக்கண்கொண்டு பார்த்து, புறக் கரணங்களால் வழிபட்டு, அகக் கரணங்களின் தூய்மை பெறுவது நாம் கொள்ளத்தக்க முதற் சாதன மாகும். இந்நிலையில் நாம் நின்று இறைவனைக் குறிக்கும் தோத்திரங்களையுஞ் சாத்திரங்களையும் ஓதியுணர்கின்ற போது நமது இதயம் நெகிழ்ந்து, உள்ளத்திலே தெளிவு பெறும் பக்குவத்தை அடைகின்றோம். ஆன்மா பதிபுண்ணி யத்திற் புகும் நிலை இதுவாகும். பொதுவாக எல்லாச் சமயங்களும் பரோபகாரத்தை அடிப்படையாகக் கொண்ட

பசு புண்ணியத்தை வற்புறுத்துவன. பசு புண்ணியத்தோடு பதி புண்ணியமும் ஆன்ம ஈடேற்றத்துக்கு அவசியம் என்பது சைவாகமங்களின் சிறப்புக்கொள்கையாகும். சைவ குலத்திற் பிறந்தும் பலர் இவ்வுண்மை அறியாது பதிபுண்ணியமாகிய சரியை கிரியாதி மார்க்கங்களைப் புறக்கணித்துத் தாம் பெற்ற பிறவிப்பயனை வீணுக இழக்கின்றனர். பதிபுண்ணியத்துறையில் சைவ மக்களை வசீகரித்து ஈடுபடுத்துவதே சைவ சித்தாந்த சமாஜம் போன்ற இயக்கங்களின் முக்கிய நோக்கமாகும். இதனாலன்றோ சைவத் திருமுறைகளையும், சைவசாத்திரங்களையும் சைவமக்கள் எளிதிற் பெறக்கூடிய அடக்க விலைப்பதிப்பாக வெளியிடும் கடமையை நம் சமாஜம் மேற்கொள்வதாயிற்று ; மகாநாடுகளைக் கூட்டிச் சைவ அறிஞர்களைக்கொண்டு சமய உண்மைகளை விரிவுரைகள் வாயிலாகத் தெளியப்படுத்துகின்றது ; பிரார்த்தனைக் கூட்டங்களை ஆங்காங்கு நடத்துகின்றது ; 'சித்தாந்தம்' என்ற பத்திரிகை வாயிலாகச் சைவப்பிரசாரஞ் செய்கின்றது. இத்தொண்டை மேலும் மேலும் விரிவாகவுந் தீவிரமாகவுஞ் செய்யவேண்டுமென்று சமாஜச் செயலாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

சைவ சமயத்துக்குத் திருநெறி என்ற .பெயர் தேவாரத்தில் வழங்கப்பட்டிருக்கிறது. இப்பெயருக்கு ஏற்ப, சைவசமயத்தில் அழகுண்டு,மங்களமுண்டு ; ஆன்மாவைப் பரவசப்படுத்தும் பக்திப்பாடல்கள் உண்டு ; செவிகளுக்கு அமுதூட்டும் இன்னிசைப் பண்கள் உண்டு ; கண்களைக் கவரும் கலைக்கருவூலங்கள் உண்டு ; அழகொழுகும் அற்புதத் திருவுருவங்கள் உண்டு. வேற்றுத் தேயத்தினரையுஞ் சமயத்தினரையும் வசிகரிக்கும் இயல்புடையதாய் நம் சமயம் இக்காலத்தில் விளங்குகிறது. இந்த அருந்தனத்தை நம் சைவ இளைஞர்கள் இழந்து புன்மை நெறியிற் செல்லாது, அவர்களைப் பாதுகாக்கும் கடமை சமாஜம் போன்ற தாபனங்களுக்கு இக்காலத்தில் ஏற்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிட விரும்புகின்றேன்.

சைவ சித்தாந்த சாத்திர உண்மைகளை அறிந்துகொள்ளவேண்டுமென்ற எண்ணம் இக்காலத்தில் தத்துவ ஆராய்ச்சியாளர்களிடையே தோன்றிப் பரவிவருகின்

றது. அமெரிக்காவில் சிக்காகோ நகரத்திலுள்ள பல்கலைக் கழகத்திற் சமயத்துறைப் பகுதித் தலைவராயிருக்கிற அறிஞர் சென்ற ஆண்டில் என்னைக் கண்டு, சைவசித்தாந்த ஆராய்ச்சிக்கு அப்பல்கலைக் கழகத்தினர் இடம் வகுத்துள் ளார்களென்று கூறினர். சைவசித்தாந்த சாத்திரங்கள் உணர்த்தும் உண்மைகள் நுணுக்கமான ஆராய்ச்சிக்கு உரியவை; பரானுபவத்தைத் தரும் பெற்றி வாய்ந்தவை. தமிழிலும் வடமொழியிலுமுள்ள சைவசித்தாந்த சாத்தி ரங்களை விளக்கி ஆங்கிலம் போன்ற உலகமொழிகளில் நூல்களை வெளிப்படுத்துவது இக்காலத்தில் அவசியஞ் செய்யவேண்டிய பணியாகும்.

இலங்கையில் இத்தகைய துறைகளிற் பணியாற்று வதற்கு ஓர் அரிய வாய்ப்புக் கிடைக்கும் என்று எதிர் பார்க்கக்கூடியதாக இருப்பதை இம் மகாநாட்டில் தெரி விக்க விரும்புகிறேன். இலங்கை சுவாதீனமடைந்த பிறகு இலங்கை அரசாங்கம் பௌத்த சமயத்தின் அபிவிருத்தி யில் அதிக ஆர்வங் காட்டிவருகின்றது. சென்ற ஆண்டில் இரண்டு பௌத்த பல்கலைக்கழகங்கள் நிறுவப்பட்டன. இலங்கையில் இந்துசமய வளர்ச்சிக்காக ஒரு பல்கலைக் கழகம் அமைக்கப்படவேண்டுமென்றும், யாழ்ப்பாணத் தில் இராமநாத வள்ளல் நிறுவிய பரமேசுவரக் கல்லூரியும் இராமநாதன் கல்லூரியும் இருக்கும் இடங்களை இப் பல் கலைக்கழகத்துக்கு உபயோகிக்கலாமென்றும் நான் இலங் கைப் பிரதமருக்குச் சமர்ப்பித்த விண்ணப்பத்தை அவர் ஏற்றுக்கொண்டுள்ளார். இப் பல்கலைக்கழகம் சைவத்துக் குந் தமிழுக்குமுரிய வித்தியாபீடமாக விளங்குமென்று எதிர்பார்க்கிறோம். இப் பல்கலைக்கழகம் விரைவில் உருவாக வேண்டுமென்று இறைவனை அவன் திருவருள் பாலிக்கும் இச் சந்நிதானத்திற் பிரார்த்திப்போமாக.

சைவம் வளரத் தமிழ் வளரும். இலங்கையிற் சைவ சமூகத்தின் இரு கண்களாகத் தோன்றிய ஆறுமுக நாவலரும் இராமநாத வள்ளலும் சைவத்தையுந் தமிழையும் ஒருங்கே வளர்த்தார்கள். அவர்கள் காட்டிய வழியைப் பின் பற்றினல், அவர்கள் காலத்தில் தமிழ்மக்கள் இலங்கையிற் பெற்றிருந்த உச்ச நிலையை மீண்டும் அடைவது திண்ணம்.

சைவம் வாழ்க! தமிழ் வாழ்க!

---

# வாழ்த்துரை*

(தவத்திரு. குன்றக்குடி அடிகளார்)

பாலாவியின் கரைமீது விளங்கும் திருக்கேதீச்சரத்து இறைவனின் திருவருட் சூழலால்—திருவார் - திரு. ஆறுமுக நாவலர் அவர்களின் சிவ நெறித் தொண்டால் வளம் பெற்ற திருப்பதியில் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவும் மாநாடும் நடைபெறுவது அறிந்து உளங் கனிந்த உவகை கொள்கிறோம். விழா இனிதே நிறைவெய்தத் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சைவசித்தாந்த நெறி காலங்கடந்த பழமை உடையது. தத்துவத்தாலும் கொள்கையாலும் மூத்த நெறி—நம்பிக்கைக்கும் நல்வாழ்வுக்கும் ஏற்றநெறி. அதனாலன்றோ பெரியவர்கள் "மேன்மைகொள் சைவநீதி" என்று விளம்பினர். சித்தாந்த சமய நெறியே முடிந்த முடிபாக விளங்கும் நெறி. "சித்தாந்தமே முடிந்த முடிபு மற்றவை எல்லாம் பூர்வபக்கங்கள்" என்பது இரத்தினத் திரயம். இன்று இவ்வுலகிடை வழங்கும் சமயநெறிகள் எல்லாவற்றையும் விட நன்றாகக் கொள்கையால் வளர்ந்த சமயநெறி சைவநெறி. "முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே" என்று இறைவனைச் சுட்டிய வரிகள் அப்படியே சிவ நெறிக்கும் பொருந்தும். எத்தகைய வினாக்களுக்கும்—ஐயங்களுக்கும் தெளிவூட்டும் தகுதி சிவ நெறிக்கு உண்டு.

சைவ சித்தாந்த சமயநெறி தமிழர் நெறி—தமிழோடு பிறந்து வளர்ந்த நெறி—தமிழை வளர்த்த நெறி—தமிழால் வளர்ந்த நெறி. இந்தியாவில் வாழ்கின்ற பல்வேறு மொழி வழிப்பட்ட இனங்களிலும் தமிழினமே சமயவாழ்வை மிகப்பழங் காலத்தில் தொடங்கியது. அன்பிலே—அறத்திலே—அருள் நெறியிலே—ஒப்புரவு பட ஒழுகுகின்ற நெறியிலே—விடுதலை வேட்கையிலே தமிழர்கள் பல்லாயிரக்

---

*திருக்கேதீச்சரத்தில் 30, 31-12-60, 1-1-61-ல் நடைபெற்ற சைவசித்தாந்த மகாசமாஜ 55-வது ஆண்டு விழா மாநாட்டிற்குத் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் அனுப்பியருளியது.

கணக்கான நாட்களுக்கு முன்னரே நாட்டம் கொண்டனர்; வாழவும் தலைப்பட்டனர். அதனாலன்றோ தமிழில் மற்ற எல்லா மொழிகளையும் விட அற நூல்களும், நீதி நூல்களும் சமய நூல்களும் மிகுந்திருக்கின்றது. பொறிகள் திருந்தி வாழ்வது மட்டும் பெரிதல்ல; புலன்களும் திருந்தி வாழ்வதே பெருமை உடையது. "புலனழுக்கற்ற அந்தணாளன்" என்று புறநானூறு கூறுகின்றது. பொறிகளை உலக ஒழுக்க நெறிகள் தடை செய்ய முடியும்; ஆனால் புலன்களின் மீது தனியரசு செய்யச் சமயநெறி வேண்டும் என்பது தமிழர்களது முடிபு. புலன்களைத் திருத்தச் சமயத்தையும், பொறிகளைத் திருத்த அரசியலையும், இரண்டையும் ஒருங்கிணைத்துப் பண்படுத்தும் பண்ணைகளாகத் திருக்கோயில்களையும் வழிபாட்டு நெறிகளாகக் கண்டார்கள்; வாழ்க்கையில் வெற்றியும் பெற்றார்கள்.

சைவ சித்தாந்த சமய நெறி தத்துவத்தாலும் கொள்கையினாலும் சிறந்து வாழ்க்கைக்கு இயைந்த நெறியாக இருந்ததனால் மக்களிடத்தில் வெகு வேகமாகப் பரவியது; தமிழினம் வாழ்ந்த இடமெல்லாம் பரவியது. சிவ நெறியின் ஆக்கமாகத் திருக்கோயில்களும், திருமடங்களும் பலப்பலவாக எழுந்தன. சாத்திர நூல்கள் எழுந்தன—தோத்திர நூல்கள் எழுந்தன. மக்கள் சைவ வாழ்வில் சைவ அனுபவத்தில் வாழ்வதற்குரிய அந்தக் கால வளர்ச்சியை இன்று எண்ணிப் பார்த்தாலும் பெருமிதமாக இருக்கிறது. 7-ம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும், ஞாலமுய்ய நாமுய்யச் சைவ நன்னெறியின் சீலமுய்ய ஆற்றிய திருத்தொண்டுகள் நினைத்தாலும், நெஞ்சை நெகிழ்விக்கின்றன. அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரங்களும் அவர்கள் நின்று வாழ்ந்த திருத்தொண்டின் நெறியும் நம்மனோர்க்கு வழிகாட்டுவனவாகும்.

சிறப்பொடு வாழ்ந்த சிவநெறியின் இன்றைய நிலை என்ன? எடுத்துச் சொல்லி உங்களை எல்லாம் வருந்தச் செய்ய வேண்டுமா? இன்றைய சிவ நெறி மிகச் சிறுபான்மையினர் பின்பற்றும் நெறியாக விளங்குகிறது. சிவ நெறியைப் பேணி வளர்க்க இன்று அரசுகள் இல்லை; ஒரு பேரியக்கமும் இல்லை; ஏதோ முன்னைப் புண்ணியத்தின்

பயனுக இன்னும் இந்த உலகில் வழங்கி வருகிறது. சமய நிலையங்களும் சிவ நெறி வளர்ச்சிக்குரிய திருப்பணிகளைப் பொறுப்புணர்ந்து ஆற்ற முன்வரவில்லை.

இன்றைய தமிழகத்தில் நாடெங்கும் சமயம் பரவி இருப்பது போலத் தோன்றினாலும் உண்மையில் அதன் நிலை இரங்கத்தக்கது. சமய நெறியின் ஆக்கத்திற்காக நம் பண்டைப் பெரியோர்களால் நிறுவப்பெற்ற திருமடங்களும்—கோயில்களும் மற்ற நிறுவனங்களும் தத்தம் போக்கில் தனித்தனியே பிரிந்து நிற்கக் காண்கிறோம். ஒத்த கருத்து—ஒரே தலைமை இன்மையைக் காண்கிறோம். அவை நிறுவப்பெற்றதன் நோக்கம் இன்று பயனளிப்பதாகத் தோன்றவில்லை. செயல்கள் நடைபெறுவதுபோலத் தோன்றினாலும் அச்செயல்கள் முழுப்பயனளிக்கக் கூடிய அளவுக்கு இல்லை என்பதை யாரும் மறக்கவோ—மறுக்கவோ முடியாது.

ஏற்பட்ட நடைமுறைத் தவறுகளால் சமநிலையங்களினின்று சமுதாயம் நெடுந்தூரம் பிரிந்து சென்று விட்டது. அது போலவே திருமடங்களும்கூடத் தமக்குள் ஒத்த உறவின்றித் தனிநடை போட்டு வருகின்றன. நூற்றுக் கணக்கில் தோன்றியுள்ள சமயச்சார்பான கழகங்களின் நிலைமையும் இதுவேயாம். பொதுவாகச் சமுதாயத்தை ஒட்டி—உறவாடி வளர வேண்டிய சமயநெறி—திருக்கோயில்களுள்ளும்—திருமடங்களுள்ளும் சிறைப்படுத்தப் பெற்றுள்ளது.

வருங்காலத்தில் சமயத்துக்கு இருக்கும் பொறுப்பு மிகப் பெரியது. இன்றைய மனித சமுதாயம் மனிதத் தன்மையினின்றும் விலகிச் செல்ல முயல்கிறது. அவர்களை வாழ்க்கையின் தேவைகளே ஆட்சி செய்கின்றன. இலட்சிய நோக்கு இல்லை. அன்பிலே—அறத்திலே—அருள் நெறியிலே நாட்டம் இல்லை. காரணம் மனித சமுதாய வாழ்வில் சமயச்சார்பு அதிகமாக இல்லை என்பது தானே! வெறும் ஆரவாரங்களால் மட்டும் மனித சமுதாய வாழ்வில் சமயச்சார்பை விளைவித்துவிட முடியாது. முறையான திருத்தொண்டுகளாலேயே முடியும்.

மனித சமுதாயத்தையே வளர்க்கும் பொறுப்பில் உள்ள சமயநெறி அப்பொறுப்பை நிறைவேற்றிக் கொள்ளும்

வகையில் தகுதிப் படுத்திக்கொள்ளக் கடமைப்பட்டிருக் கிறது. சிவ நெறியின் அடிப்படைக்கொள்கை திருத் தொண்டின் வழி நிற்பதாகும்.

"தொண்டலாது உயிர்க்கு ஊதியம் இல்லை"

என்றார் அப்பரடிகள். திருத்தொண்டின் வகை இரண் டாகும். ஒன்று இறைவனுக்குச் செய்யும் திருத்தொண்டு. மற்றையது மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்காகச் செய்யும் திருப்பணிகள். வறுமை—பகைமை—அறியாமை முதலியவற்றினின்று சமுதாயம் விடுதலை பெறுவதின் மூலமே அருளியல் வழி நடைபோட முடியும் என்பது மறக்கவோ—மறுக்கவோ முடியாத உண்மை. நம்முடைய சமயப் பெரியோர்கள் வாழ்ந்து காட்டிய நெறியும் இதுவே யாம். திருஞான சம்பந்தரின் ஞான அனுபவம், திருவீழி மிழலைப் பஞ்சத்தின் கொடுமைக்கு மீறியதாக இல்லை. பிள்ளையை இழந்த பெற்றோரின் அவலநிலையை மீறியதாக இல்லை சுந்தரரின் ஞான அனுபவம்.

ஆகவே இனிமேலாவது சிவநெறியை வளர்க்க—முறையான இயக்கம் வேண்டும். சமயத்தை ஒழுங்கு படுத்தப்பெற்ற முறையில் வளர்க்கத் திட்டம் வேண்டும். ஆயிரக்கணக்கான முழுநேர ஊழியர்களை—சைவத் தந்தை மார்களைத் தயார் செய்ய வேண்டும். இனம்—நாடு—மொழி பேதங்களைக் கடந்து சைவ நெறியை உலகப்பொதுநெறி யாக வளர்க்க முன் வரவேண்டும். சமய நிலையங்கள் அனைத்தும் தம்முள் ஒன்றுபட்டுத் திருப்பணிகளை மேற் கொள்ள வேண்டும் என்பன போன்ற கருத்துக்களை மா நாட்டில் கூடிஇருக்கும் சைவ அன்பர்கள் பரிசீலிக்க வேண்டும் என்பதே நமது விருப்பம்.

இன்றைய நிலையில் தமிழகத்தைக் காட்டிலும் ஈழத் திரு நாடே சிவநெறி வளர்ச்சிக்குரிய சூழ்நிலையில் சிறந் திருக்கிறது என்று கூறுவதே உண்மை. திருவார் திரு. ஆறுமுக நாவலர் அவர்கள் பரம்பரையில் வந்த ஈழத்திரு நாட்டுத் தமிழ்ப் பெருங்குடி மக்கள் சிவநெறிப்பற்றில் சிறந்து விளங்குகிறார்கள். அவர்கள் திருநாட்டின் கண் ணென விளங்கும் திருக்கேதீச்சரத்தில், பல ஆண்டுகளுக்கு முன் தோன்றி முறையாகச் சிவநெறியும் செந்தமிழும் வளர்த்துப் புகழ்கொண்டுள்ள சைவ சித்தாந்த சமாஜத்தின்

விழா நடைபெறுவது சாலப் பொருத்தமானது. இம்மா நாடு சைவ உலகுக்குப் புதுவாழ்வையும் பொலிவையும் தாத் திருவருள் பாலிக்கும் வண்ணம் அண்ணமலே அண்ண லின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம். மற்றும் சமாஜ அன்பர்களுக்கும், விழாவில் பங்குகொள்ளும் அன்பர்களுக்கும், மாநாட்டைப் பொறுப்பேற்று நடத்தும் திருக்கேதீச்சரத் திருப்பணிச் செல்வர் சர். கந்தையா வைத்தியநாதன் அவர்களுக்கும், மற்ற அங்கத்தினர்களுக் கும் நமது வாழ்த்து.

---

# சமாஜ 55-வது ஆண்டு அறிக்கை

சைவ சித்தாந்த மகா சமாஜம் முதன் முதலில் திருப்பாதிரிப்புலியூரில் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் மடா லயத்தில் விசுவாவசு ஆண்டு ஆனிமீ (7-7-1905) வெள்ளிக் கிழமை தொடங்கப்பெற்று, இன்றுவரை இறைவன் திரு வருளால் மேன்மைகொள் சைவநீதி உலகெலாம் விளங்க வேண்டுமென்ற பெருநோக்குடன் சமயத் தொண்டாற்றி வருகின்றது. S. No. 6 of 1915—16 என்ற எண்ணில் இச்சமாஜம் 11-12-1915-ல் சபைகளின் பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப்பட்டுள்ளது.

### இவ்வாண்டின் சமாஜப் பணியாளர்கள்

**தலைவர் :** திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. அவர்கள்.

**துணைத் தலைவர்கள் :** (1) திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்கள். (2) திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ. அவர்கள்.

**செயலர் :** (1) திரு. கி. இராமலிங்க முதலியார், எம்.ஏ., அவர்கள்.

**துணைச் செயலர் :** (2) திரு. ஜி. கல்யாணம் பிள்ளை, எம்.ஏ. அவர்கள் 1-1-60 முதல் 29-5-60 வரை.

(3) திரு. மா. ப. தியாகராஜன், பி.ஏ. அவர்கள் 30-5-60 முதல் 31-12-60 வரை.

**பொருட்காப்பாளர் :** 1-1-60 முதல் 29-5-60 வரை திரு. மா. ப. தியாகராஜன், பி.ஏ. அவர்கள். 30-5-60 முதல் 31-12-60 வரை திரு. ஆறுமுக முதலியார் அவர்கள்.

சென்ற ஆண்டு 54-வது ஆண்டு விழாவை 25-12-59 முதல் 27-12-59 வரை வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் சிறப்புற நடத்தித் தந்தனர். இவ்வாண்டு, 55-வது ஆண்டு விழா திருக்கேதீச்சுரத்தில் திருக்கேதீச்சுரர் ஆலயத் திருப்பணிச் சபையினரால் நடத்தித் தரப்படுகிறது.

## சமாஜத்தின் நோக்கங்கள்

உய்யும்வகை யாதென வேட்கைகொண்டு வினவும் மக்கள் உலகெங்கும் பரவி நிற்கின்றனர். சைவ சமயத்தில் அவ்வேட்கையைத் தணிக்கவல்ல தக்க விடையும் வழியும் பொதிந்து கிடப்பதை அவர்களுக்கு எடுத்துக்காட்ட முற்படுவதே இச் சமாஜத்தின் முக்கிய நோக்கமாகும். அக் குறிக்கோள் கொண்டு, சைவ சமய நூல்களை அடக்க விலைக்குப் பதிப்பித்து வழங்கல், "சித்தாந்தம்" என்னும் உயரிய பத்திரிகையை மாதந்தோறும் அரிய கட்டுரைகளுடன் வெளியிடல், சமயச் சொற்பொழிவுகளை மாதந்தோறும் ஆங்காங்கு நிகழ்த்தல், சைவ சமய பரமாசாரியர்கள், நாயன்மார்கள், சந்தான குரவர்கள் ஆகியவர்களுடைய திருநட்சத்திரங்களைக் கொண்டாடுதல், சிவாலயங்களில் வார வழிபாடு நடத்துதல், "சைவப் புலவர் தேர்வு" "இளஞ் சைவப்புலவர் தேர்வு" ஆங்காங்கு நடாத்தி மாணவர்கள் சைவ சமய நூல்களைக் கற்க ஊக்குவித்தல், துண்டுப் பிரசுரங்கள்மூலம் சமய போதனைகள்—நாயன்மார்கள் சரித்திரங்கள் வெளியிடுதல், தக்கவர்கள் ஆதரவுகொண்டு தேவார வகுப்புகளைக் கூடிய இடங்களில் ஏற்படுத்தி மாணவர்களுக்குப் பன்னிரு திருமுறைகளைக் கற்பித்துப் பண்ணிசையுடன் தேவாரப்பாடல்களைப் பாடக் கற்பித்தல் முதலியன செய்து வருகின்றது.

இவ்வாண்டு நிகழ்த்தப்பட்ட இத்தகைய பணிகளின் விவரங்களை ஈண்டு நோக்குவாம்.

## வெளியீடுகள்

"திருவெம்பாவை-திருப்பள்ளி யெழுச்சி" திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் அரிய உரையுடன், சமாஜத் தலைவரவர்களின் பொருளுதவிகொண்டு வெளி

யிடப்படுகிறது. இது முதன்முதலில் சமாஜப் பொன்விழா வின்போது 1955-ல் சிதம்பரத்தில் வெளியிடப்பட்டது.

சென்ற ஆண்டு நடத்திய மாநாட்டில் ஆற்றிய சைவ சமயச் , சொற்பொழிவுகள் ஒன்ருகத் திரட்டப்பட்டுச் 'சைவசமயச் சொற்பொழிவுகள்' என்னும் நூல் 362 பக்கங் களில் வெளியிடப்பட்டுள்ளது. அதன் விலை ரூபா 3. ஆண்டு விழாவில் விற்பனையானது போகப் பெரும்பகுதி அப்பிரதி கள் சமாஜத்திலிருக்கின்றன. அதன்மூலம் சமாஜத்தின் கட்டிட நிதி ரூ. 2000 முடங்கிக் கிடக்கின்றது. அப்புத் தகங்களை வாங்கிப் பயனடைவோர் சமாஜத்திற்கும் பேருதவி புரிந்தவர் ஆவார்கள். அதுவுமன்றிப் "பெரிய புராணம்" "முருகன் முந்நூல்" "ஞானியாரடிகள் நினைவு மலர்" ஆகிய நூல்களும் விரைவில் விலையாக ஒவ்வொரு அங்கத்தினரும் முயற்சி செய்யுமாறு கேட்டுக்கொள்ளப் படுகிறது.

சைவ சமயப் பாடபுத்தகங்கள் பள்ளியில் அமைக்க அச்சிட்டுத் தருவதாக வாக்களித்துள்ள அம்பாசமுத்திரம் வி. எஸ். ஆறுமுகம் பிள்ளை அவர்களுக்குச் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

### "சித்தாந்தம்"

இச்சிறந்த மாத சஞ்சிகை சமாஜ அங்கத்தினர்களுக்கு இலவசமாக வழங்கப்படுகிறது. போதிய அங்கத்தினர் களுடைய தொகைப் பெருக்கம் இல்லாக் குறையால் இப் பத்திரிகையின் அளவு குன்றிச் சில கட்டுரைகளே வெளி யிடப்படுகின்றன. 600 பிரதிகளே மாதா மாதம் அச்சிடப் பட்டு வருகின்றன. இச்சஞ்சிகையை அதிக பக்கங்க ளுடன் அரிய இனிய பல கட்டுரைகளுடன் வெளியிட 1000 பிரதிகளாகிலும் அச்சிடக்கூடிய நிலையில் அங்கத் தினர்கள் தொகை அதிகப்பட ஒவ்வொரு அங்கத்தினரும் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டப்படுகிறது. 570 அங்கத் தினர்களே தற்போதுள்ளார்கள்.

### கூட்டங்கள்

இவ்வாண்டு சமாஜ நிர்வாகசபைக் கூட்டம் 7-ம், பொதுக் கூட்டங்கள் 2-ம் நடைபெற்றன.

## சிறப்புக் கூட்டங்கள்

1. 19-1-60 இராயப்பேட்டை ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் தலைமையில், திரு. புலவர் முருகவேள் எம்.ஏ., எம்.ஓ.எல். அவர்கள் "சண்டேசுரர்" என்பது பற்றியும், திருவாட்டி எஸ். இராஜலட்சுமி பி.ஏ.(ஹானர்ஸ்) அவர்கள் "திலகவதியார்" என்பதுபற்றியும் பேசினார்கள்.

2. 23-1-60 : இராயப்பேட்டை சுந்தரேசுவரர் கோயிலில் திரு. சி. என். சிங்காரவேல் முதலியார் எம். ஏ. அவர்கள் தலைமையில், வித்வான் திரு. அம்பை - சங்கரனார் திரு. டி. ஆர். சாரங்கபாணி எம்.ஏ. இவர்கள் முறையே "திருநீலகண்டர்" "தாயுமானவர்" என்னும் பொருள்கள் பற்றிப் பேசினார்கள்.

3. 30-1-60 : பூக்கடைச் சென்னமல்லேசுவரர்கோயி லில் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமை யில் திரு. கயப்பாக்கம் - சோமசுந்தரஞ் செட்டியார், திரு. ஜி. கல்யாணம், எம்.ஏ. இவர்கள் முறையே "கலிப் பகையார்" "அப்பூதியடிகள்" என்பனபற்றிச் சொற் பொழிவாற்றினர்.

4. 8-2-60 : திருமயிலைக் கபாலீச்சுரர் கோயிலில் திரு. வி. ஆறுமுக முதலியார் அவர்கள் தலைமையில் வித்வான் திரு. டி. பிச்சைப் பிள்ளை, திரு. பாலூர் - கண் ணப்ப முதலியார் இவர்கள் முறையே "கண்ணப்பர்," "அரிவாட்டாயர்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற் பொழிவாற்றினார்கள்.

5. 16-2-60 : எறிபத்த நாயனார் திருநட்சத்திரவிழா இராயபுரம் சிவசுப்ரமணிய சுவாமி கோயில் இறைபணிக் கழகச் சார்பில் நடைபெற்றது. திரு. என். டி. கிருஷ்ண சாமி, எம்.ஏ., பி.டி. அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள்.

6. 23-2-60 : சென்னை அருணாசலேசுவரர் கோயிலில் "காரி நாயனார்", "கோச்செங்கட் சோழ நாயனார்" என்னும் பொருள்கள்பற்றி முறையே திருவாளர் ஜி. வடி வேலாயுதம் எம்.ஏ., டாக்டர் மா. இராசமாணிக்கனார் எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி. இவர்கள் சொற் பொழிவாற்றினார்கள்.

7. 16-3-60 : சென்னை பூக்கடை சென்ன மல்லீசுவரர் கோயிலில் "காரைக்காலம்மையார்" திருநட்சத்திர விழா நடைபெற்றது. கோவை சிவக்கவிமணி (சி.கே.எஸ்.) தவத்திரு சம்பந்த சரணலயத் தம்பிரான் அவர்கள் இயற்றிய "சேக்கிழாரும் சேயிழையாரும்" என்ற நூல் வெளியிடப் பெற்றது.

8. 25-3-60 : இராயப்பேட்டை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் "தண்டியடிகள் நாயனர்" என்ற பொருள்பற்றித் திரு. மா. ப. தியாகராஜ முதலியார் பி.ஏ. அவர்கள் சொற்பொழிவாற்றினர்கள்.

9. 3-4-60 : நேச நாயனர், கணநாத நாயனர், முனையடுவார் நாயனர் இம்மூவர் திருநட்சத்திரங்களும் ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் கொண்டாடப்பெற்றன.

10. திருமயிலைத் திருவிழாச் சொற்பொழிவுகள் :— சென்னை, திருமயிலாப்பூர்க் கபாலீசுவரர்கோயிலில் நடக்கும் பிரமோற்சவத்தின்போது நமது சமாஜத்தின் சார்பில் வெள்ளீசுவரர் கோயிலில் 5-4-60 முதல் 11-4-60 வரை நாள்தோறும் மாலை 7 மணி முதல் திரு. ஜி. கலியாணம் பிள்ளை எம்.ஏ., வித்வான் அம்பை சங்கரனர், திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார், எம்.ஏ.,பி.டி., திரு. ச. சிவகுமரன் எம்.ஏ., திரு. செ. சுந்தரன், திரு. ஜி. வடிவேலாயுதம் எம்.ஏ., திரு. சி. என். சிங்காரவேல் முதலியார் எம்.ஏ. முதலியோர் முறையே "நால்வர் நன்னெறி", "வெள்விடைப் பாகர்", "பிரணவப் பொருள்", "திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள்", "திருமுறைகள்", "பிட்சாடனர் திருக்கோலம்", "திருத்தொண்டர்" என்னும் பொருள்கள்பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றினர்.

11. 2-5-60 திங்கட்கிழமை மாலை 7 மணிக்குச் சமாஜத்தின் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் அப்பர் திருநாள் கொண்டாடப்பெற்றது. சமாஜ உப தலைவர் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் ஓதுவாமூர்த்தி திரு. சிங்காரவேல் முதலியாரவர்கள் திருநாவுக்கரசர் வாழ்க்கை வரலாற்றைப்பற்றியும், திரு. வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார் அவர்கள் "அப்பர் அருள்மொழி" என்ற பொருள்பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள். வைணவ பட்டாசாரியர்கள் விஷ்ணு ஆல

யங்களில் நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் ஓதுவதுபோல் சிவாலயங்களில் சிவாசாரியர்களும் குருக்கள்மார்களும் அப்பர் அருள்மொழிகளை ஓதவேண்டுமென்று திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார் கூறினர். சிவாலயங்களில் தேவாரம் ஓதி அர்ச்சனைசெய்யும் நற்காலம் வரவேண்டுமென்றும் தெரிவித்தார்.

12. திருஞானசம்பந்தர் திருநாள் :—நமது சமாஜச் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் 12-6-60 ஞாயிறன்று மாலை சிறப்புறக் கொண்டாடப்பெற்றது. திருவாளர் அ. சோமசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ. அவர்கள் தலைமையில், நல். முருகேச முதலியார் பி.ஏ., சைவப் பெரியார் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை பி.ஏ., எல்.டி., புலவர் முருகவேள் எம்.ஏ., எம்.ஓ.எல்., வித்வான் அம்பை சங்கரனர் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

13. 28-6-60: செவ்வாய்க்கிழமை மாலை 6-30 மணிக்குத் திருமயிலைக் கபாலீச்சரத்தில் மாணிக்கவாசகர் விழா கொண்டாடப்பெற்றது. திரு. ஜி. கல்யாணம்பிள்ளை எம்.ஏ. (திருக்கோயில் ஆசிரியர்) அவர்கள் தலைமை வகித்தார்கள். திரு. சி. என். சிங்காரவேல் முதலியார் எம்.ஏ. அவர்கள் சொற்பொழிவாற்றினர்கள்.

14. சுந்தரர் திருநாள் :—21-7-60 ஞாயிறன்று மாலை $6\frac{1}{2}$ மணிக்குத் திருமயிலைக் கபாலீச்சரத்தில் சுந்தரர்திருநாள் கொண்டாடப்பெற்றது. திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் தலைமையில் " திருக்கோயில் " ஆசிரியர் ஜி. கல்யாணம் பிள்ளை எம்.ஏ. அவர்களும், திருவள்ளுவரகம் இராமநாதம் பிள்ளை அவர்களும் சொற்பொழிவாற்றினர்.

17. பெரிய புராண விரிவுரைகள் :—15-7-60 முதல் 17-7-60 வரை மூன்று நாட்கள், திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் திரு. மா. இராசமாணிக்கனர், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல். பிஎச்.டி. அவர்களால் திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் பெருஞ் சிறப்புடன் நடத்தப்பெற்றன.

18. மெய்கண்டார் விழா :—29-10-60 சனிக்கிழமையன்று சமாஜச் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் அறநிலையத்துறை அலுவலர் திரு. டி. எச். விவேகானந்தம்

பிள்ளை பி.ஏ., எல்.டி. அவர்கள் தலைமையில் மிகச் சிறப்புற நிகழ்ந்தது. அதுபோது, திரு. புலவர் முருகவேள் எம்.ஏ., எம்.ஓ.எல். அவர்கள் "சிவஞானபோதம்" பற்றியும், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் பி.ஏ., பி.எல். அவர்கள் "மெய்கண்டார்" பற்றியும், திரு. பாலூர் கண்ணப்ப முதலியார் அவர்கள் 'ஆணவமலம்' என்ற பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றினர்கள்.

19. தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தார் நடத்தி வரும் மாத வழிபாட்டுக் கூட்டங்களிலும் சமாஜம் பங்கெடுத்துக்கொண்டுவருகிறது. திருவாலங்காடு, திருவிற்கோலம் (கூவம்), திரு இலம்பையங் கோட்டூர், திருமாற்பேறு, திருவிடைச்சுரம், திருப்போரூர், திருக்குரங்கணில் முட்டம், திருமாகறல், திருவன்பார்த்தான் பனங்காட்டூர், திருவோத்தூர், திருக்காளத்தி ஆகிய இடங்களில் இவ்வாண்டு மாதாந்தரக் கூட்டங்கள் நடைபெற்றன.

20. திருப்போரூர் முருகன் செந்தமிழ்க் கழகத்துடனும் சமாஜம் தொடர்புகொண்டு பணியாற்றிவருகிறது. இக் கழகத்தின் செயலர் திரு. வித்வான் அம்பை சங்கரனர் அவர். 4-11-60 வெள்ளிக்கிழமையன்று திருப்போரூர் முருகன் செந்தமிழ்க்கழகத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழா, தாம்பரம் கிறித்துவக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் தலைமையில் மிகச்சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. பிரதி கிருத்திகைகள் தோறும் சமயச் சொற்பொழிவுகள் இக்கழகத்தில் நடைபெறுகின்றன.

### சமாஜக் கட்டிடம்

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் அன்புடன் அளித்த நன்கொடை ரூபா 20,000 கொண்டு சமாஜத்திற்காகச் சென்னை அந்திக் கடைத்தெருவில் (Evening Bazaar) Door Nos. 2, 3, 4 (R. S. No. 10121/16) மாதம் 125 ரூபா வருவாயுள்ள மூன்று கடைகள் விலைக்கு வாங்கப்பெற்றுப் பத்திரமும் ஆவணக்களரியில் (Sub-Registrar Office) பதிவு செய்யப்பெற்றது என்பதைப் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். சமாஜம் வள்ளன்மை மிக்க

தலைவர் அவர்களுக்கு என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது.

## மாநாடுகளும் ஆண்டு விழாவும்

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 54-ஆம் ஆண்டு நிறைவு விழாவையொட்டிச் சைவர் மாநாடு, சைவ மங்கையர் மாநாடு, சைவ இளைஞர் மாநாடுகள் வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் 1959-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25, 26, 27-ஆம் தேதிகளில் நடைபெற்றன. அவற்றைச் சிறப்புற நடத்தித் தந்த அப்பா - திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களுக்குச் சமாஜம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

அவ் விழாவைப்பற்றிய முழு விவரமும் சித்தாந்தம் மலர் 33 இதழ் 2-ல் வெளியிடப்பட்டுள்ளது. அவ்விழாவைத் துவக்கிவைத்த அறநிலையத்துறை ஆணையாளர் உயர்திரு. அ. உத்தண்டராமன் ஐ.ஏ.எஸ். அவர்களுக்கும், சமாஜப் பதிப்பு கந்தரனுபூதி நூலை வெளியிட்ட முன்னாள் உயர்நீதிபதி-உயர் திரு. வி. சுப்பிரமணிய நாடார் பி.ஏ ,பி.எல். அவர்களுக்கும், அவ்விழாவில் கொடியேற்றிய உயர்திரு. வா. து. நடராஜன் அவர்களுக்கும், சைவர் மாநாட்டுத் தலைவர் சிவத்திரு. வித்வான் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகளுக்கும், சைவ மங்கையர் மாநாட்டுத் திறப்பாளர் - திருமதி. நீலாவதி இராம சுப்பிரமணியம் அவர்கட்கும், தலைவர் திருமதி. சௌந்தரம் கைலாசம் அம்மையார் அவர்களுக்கும், சைவ இளைஞர் மகாநாட்டுத் திறப்பாளர் - திருமிகு. மணலி. சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ. அவர்கட்கும், தலைவர் திரு. ந. சஞ்சீவி எம்.ஏ. அவர்களுக்கும், மூன்று நாட்களி லும் சொற்பொழிவாற்றிய அன்பர்கட்கும் சமாஜம் நன்றி தெரிவித்துக்கொள்கிறது.

## சமய அறிவுவளர்ச்சித் தேர்வுகள்

சைவப் புலவர் தேர்வு, இளஞ் சைவப்புலவர் தேர்வு ஆகிய இரு தேர்வுகள் ஆண்டுதோறும் சமாஜத்தில் நடத்தப்பட்டு வருகின்றன. இதுவரை இத் தேர்வுகளில் வெற்றிபெறுவோர்க்குப் பட்டமளிப்பு மட்டும் வழங்கப் பெற்றுவந்தது. இவ்வாண்டு சைவப் புலவர் தேர்வுக்கு மூல தனமாக ரூ. 1000 ஒரு அன்பரால் (பெயர் குறிக்கக் கூடா

தெனப் பொருள் வழங்கியோர் கேட்டுக்கொண்டபடி) வழங்கப்பட்டுள்ளது. அப் பெரியாருக்குச் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. அம் மூலதனம் கொண்டு வரும் வட்டியைச் சைவப் புலவர் தேர்வில் முதன்மையாக வெற்றி பெறுவோர்க்குப் பரிசு வழங்க வேண்டுமென்று தீர்மானித்துள்ளோம். இளஞ் சைவப் புலவர் தேர்வில் வெற்றி பெறுவோருக்குப் பரிசு வழங்க மூலதனத்துக்காக நன்கொடை ரூ. 50 (ஐம்பது) கொடுத்துள்ள திருவாரூர் திரு. இராஜகோபால் பிள்ளை அவர்கட்கும், சமாஜம் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறது.

இவ்வாண்டு தேர்வில் வெற்றி பெற்றவர்கள்.

1. புனிதவதி
2. மங்கையர்க்கரசி
3. சி. குமரேசப் பிள்ளை

(1–3) சைவப் புலவர்

4. வ. கந்தசாமி—இளஞ் சைவப் புலவர்

தேர்வு, யாழ்ப்பாணம், கொழும்பு, நாகர்கோயில் ஆகிய இடங்களில் நடைபெற்றது.

வினத்தாள் குறித்தும், விடைத்தாள் திருத்தியும், தேர்வு நடந்ததை மேற்பார்வை செய்தும் உதவிய அன்பர்களுக்குச் சமாஜம் நன்றி செலுத்துகிறது.

## தேவார இசை வகுப்புகள்

சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ., அவர்கள் முயற்சியால் தேவார வகுப்புகள் ஆங்காங்கு நடத்தப்பட்டுவருகின்றன. அதற்குச் சமாஜக் கட்டிட வருவாயினின்று பொருள் வழங்கப்படுகின்றது.

## பொருள் நிலை

55-வது ஆண்டு (1-12-59 முதல் 30-11-60) வரை வரவு செலவுக் கணக்கிலிருந்து எடுக்கப்பட்ட தொகுப்பேடு இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆண்டின் இறுதியில் இந்தியன் பாங்கின் இருப்பு ரூ. 727-73; பொருளாளர் கையிருப்பு ரூ. 88-78; கைவசமுள்ள புத்தகங்களின் விலை பெறுமானம் ரூ. 4263·18. பொருள் நிலை மிகவும் வருந்தத்தக்கதாக இருப்பதை அன்பர்கள் கவனித்துக்குறைவற ஆதரவு தரவேண்டுமென்று பெரிதும் மன்றுடி வேண்டுகிறேம்.

## விண்ணப்பம்

சமாஜத்திற்கெனக் கட்டிடம் 3 கடைகளாகத் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.ஏ. அவர்கள் கொடுத்த ரூ. 20,000 பொருள்கொண்டு வாங்கப்பட்டதெனினும் அதைப் பயன்படுத்திக்கொள்ளும் நிலையில் கட்டிடம்மாற்றி அமைக்கப்படப் பணம்தேவையாயுள்ளபடியால் தலைவரவர்களைப்போன்று பெருமக்கள் பொருளுதவிசெய்ய முன்வர வேண்டுகிறோம். திரு. மணலி இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் கட்டிடநிதிக்கென வழங்குவதாக அன்புடன் தெரிவித்த ரூ. 6000-ல் வரவுவந்தது ரூ. 4000போக இன்னும் ரூ. 2000 எதிர்பார்க்கப்படுகிறது. இத்தொகை பன்மடங்கு பெருகினாலல்லது, சமாஜக் கட்டிடம் நல்ல இடத்திலமைந்தும் பயனளிக்கும் வகையில் சிறப்புற அமைக்கப்பட இயலாது. பெருமக்களின் நன்கொடைகள் எதிர்பார்க்கப்படுகின்றன.

## நன்றி

இம் மகா சமாஜத்தைத் தோற்றுவிக்கக் காரணமாயிருந்த மறைமலையடிகள் என்று புகழ்பெற்ற சுவாமி வேதாசலம் அவர்களுக்கும், சித்தாந்தப் பேராசிரியர் நல்லசாமி பிள்ளை அவர்களுக்கும், சொல்வன்மை மிக்க ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் அவர்களுக்கும், ஸ்ரீலஸ்ரீ கல்யாணசுந்தர யதிந்திரர் அவர்களுக்கும் சமாஜம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. அப்பெரியார்களின் ஒருமித்த நோக்கமும், அன்புகெழுமிய ஆர்வமும், தூய்மைமிகு எண்ணங்களுமே சமாஜத்தை இதுகாறும் இருக்க இடமின்றிய இடர்ப்பாட்டினும் நிலைநிறுத்தித் தொண்டாற்றிவரச் செய்துள்ளது.

"சித்தாந்தம்" பத்திரிகைக்குக் கட்டுரை எழுதியனுப்பிய அன்பர்களுக்கும், சமாஜக் கூட்டங்களை அடிக்கடி நடத்த இடந்தந்துதவும் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையினர்க்கும் சமாஜம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளது. சிறப்பு விழாக்களை நடத்துவதற்கு ஸ்ரீ கபாலீச்சரத்தில் இடமளிக்கும் கபாலீச்சர தேவஸ்தான அதிகாரிகளுக்கும் தர்மகர்த்தர்களுக்கும் சமாஜம் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளது. புதிய

